# இறையருளா?
# எளிதில் ஈட்டலாமே!



வேங்கடரமணன்
பதிப்பித்தோன்

# திரு அங்கமாலை - அப்பர்

தலையே, நீ வணங்காய்! - தலைமாலை தலைக்கு அணிந்து,
தலையாலே பலி தேரும் தலைவனை - தலையே, நீ வணங்காய்!

கண்காள், காண்மின்களோ! - கடல் நஞ்சு உண்ட கண்டன்தன்னை,
எண்தோள் வீசி நின்று ஆடும் பிரான்தன்னை, - கண்காள், காண்மின்களோ!

செவிகாள், கேண்மின்களோ! சிவன், எம் இறை, செம்பவள
எரி போல் மேனிப் பிரான், திறம் எப்போதும், செவிகாள், கேண்மின்களோ!

மூக்கே, நீ முரலாய்! - முதுகாடு உறை முக்கணனை,
வாக்கே நோக்கிய மங்கைமணாளனை, - மூக்கே, நீ முரலாய்!

வாயே, வாழ்த்துகண்டாய்! மதயானை உரி போர்த்து,
பேய் வாழ் காட்டுஅகத்து ஆடும் பிரான்தன்னை - வாயே, வாழ்த்துகண்டாய்!

நெஞ்சே, நீ நினையாய்! நிமிர்புன்சடை நின்மலனை,
மஞ்சு ஆடும் மலை மங்கை மணாளனை, - நெஞ்சே, நீ நினையாய்!

கைகாள், கூப்பித் தொழீர்! - கடிமாமலர் தூவி நின்று.
பைவாய்ப் பாம்பு அரை ஆர்த்த பரமனை - கைகாள், கூப்பித் தொழீர்!

ஆக்கையால் பயன் என்? - அரன் கோயில் வலம்வந்து,
பூக்கையால் அட்டி, ''போற்றி!'' என்னாத இவ் ஆக்கையால் பயன் என்?

கால்களால் பயன் என்? - கறைக்கண்டன் உறை கோயில்
கோலக்கோபுரக் கோகரணம் சூழாக் கால்களால் பயன் என்?

உற்றார் ஆர் உளரோ? - உயிர்கொண்டு போம்பொழுது,
குற்றாலத்து உறை கூத்தன் அல்லால், நமக்கு உற்றார் ஆர் உளரோ?

இறுமாந்து இருப்பன்கொலோ? - ஈசன் பல்கணத்து எண்ணப்பட்டு,
சிறுமான் ஏந்திதன் சேவடிக்கீழ்ச் சென்று, அங்கு இறுமாந்து இருப்பன்கொலோ.

தேடிக் கண்டுகொண்டேன்! திருமாலொடு நான்முகனும்
தேடித் தேட ஒணாத் தேவனை, என் உளே, தேடிக் கண்டுகொண்டேன்!

129

# ஸமர்ப்பணம்

அல்லும் பகலும் அளவளாவியே அரனடியின்பால்
எனக்கு அன்பூட்டிய ஆசிரியப் பெருந்தகை
**ப்ரஹ்மஸ்ரீ R. சுப்ரஹ்மண்ய சாஸ்திரியார் அவர்களுக்கும்**
(பிரெஞ்சு இந்திய கலைக் கழகம், புதுச்சேரி)
அம்பலவாணர் அடித்தொண்டில், (என் பல்வகைக்
குற்றங்களையும் பொறுத்த வண்ணம்) ஈடுபடுத்திவரும்
**ப்ரஹ்மஸ்ரீ G. பரமேசுவர தீக்ஷிதர் சதுர்வேதி அவர்களுக்கும்**



**வேதாந்த வித்யா ப்ரவிண**

**ப்ரஹ்மஸ்ரீ நீ.வை. வேங்கட சுப்ரஹ்மண்ய சாஸ்திரியாரின்**

**மறைவின் நான்காமாண்டு**

**நினைவஞ்சலி ஸத்ஸங்கத்தில்**

***24.08.1997* அன்று**

**நூற்கடல் திருவையாறு வே. கோபாலய்யர்** *M.A., B.O.L.*, **அவர்களால்**

**வெளியிடப்பட்டது.**

இலவச முதல் பதிப்பு
ஆகஸ்ட் 1997



Printed by
**Anuthama Printers**
6, Thambiah Road Extension,
West Mambalam,
Chennai - 600 033.
☎ 428181

இந்நூலைப் படிப்பவர்கள் தங்கள் கருத்துக்களைத்
தவறாமல் கீழ்க்காணும் முகவரிக்கு எழுதவும்:-

**வே. வேங்கடரமணன்**
'சிவசக்தி இல்லம்'
33, மூன்றாவது குறுக்குத் தெரு,
தாகூர் நகர்,
புதுச்சேரி - 605 008.

# எளிதில் ஈட்டலாம்

பெருகலாம் தவம்; பேதைமை தீரலாம்;
திருகலாகிய சிந்தை திருத்தலாம்;
பருகலாம் பரமாயதோர் ஆனந்தம்
மருகலானடி வாழ்த்தி வணங்கவே (5.88.1)
(அப்பர்)

அவள் கீழே தவறவிட்ட கைக்குட்டையை எடுத்துத் தருகிறான் ஒருவன். இன்னொருவன் இன்னொருத்திக்காகவும் அவள் தோழிக்காகவும் பேருந்தில் தான் அமர்ந்திருந்த இருக்கையைக் காலி செய்து தருகிறான். இதுபோன்ற சிறிய செயல்களில் ஆரம்பித்து ஆண்மகன் ஒருவன் தான் விரும்பும் பெண்ணிடம் தன் விருப்பத்தை அறிவிக்க முயல்கிறான்; அவளது அன்பைப் பெறவும் இதுபோன்ற செய்கைகள் ஏதுவாகின்றன.

தன் நண்பருடைய இல்லத்திற்குச் செல்லும் போதெல்லாம் ஒருவர் அவ்வீட்டிலுள்ள குழந்தைக்குப் பிடித்த தின்பண்டங்களை வாங்கிச் செல்கிறார். அந்த குழந்தை இவரிடம் ஒட்டிக் கொண்டுவிடுகிறது. அடிக்கடி 'டாடா' அழைத்துக் கொண்டு போகின்றவரையும் குழந்தைக்குப் பிடிக்கும். சுவையான கதைகள் கூறுகின்ற மாமாவைச் சுற்றிக்கொண்டு குழந்தைகள் விடவே விடா.

கற்றுத் தருவதைக் கவனத்துடன் உடனே பிடித்துக் கொள்ளும் மாணவனை ஆசிரியருக்குப் பிடிக்கிறது. உதாசீனம் செய்யாது, ஊகித்துப் பணிவிடை புரியும் புதல்வரைப் பெற்றோருக்குப் பிடிக்கும். தன்னை எதிர் நோக்கி வரும் விருந்தினரை நன்கு உபசரிக்கும் மனைவியைக் கணவனுக்கு மிகவும் பிடிக்கிறது. குறித்த காலத்திற்குள் பணியினைச் செய்து முடிக்கும் தொழி லாளியை முதலாளி மெச்சுகிறான். இவ்வாறு அவரவரைத் திருப்தி செய்து நன்மதிப்பையும் அன்பையும் பெற

வெவ்வேறு செயல்கள் துணைபுரிவதைப் போலவே இறைவனின் திருவருளைப்பெற, அவரவர் தகுதிக்கும் நிலைகளுக்கும் ஏற்ப, சின்னச் சின்ன செயல்கள் வகுக்கப்பட்டுள்ளன. இவை சிவ **புண்ணியங்கள்** என்று கூறப்படுகின்றன. இச் செயல்களால் இறைவன் மகிழ்கிறான். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே!' என்பதைக் கேட்டிருப்பீர்களே!

## அட, இவ்வளவு எளிதிலா?

கற்றுக் கொள்வன வாயுள நாஉள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடையான்உளன் நாம்உளோம்
எற்றுக்கோ நமனால் முனிவுண்பதே? (5.91.6)

- அப்பர்

சென்னையில் போக்குவரத்து நெரிசலும் சுறுசுறுப்பும் உள்ள சாலையொன்றின் ஓரத்தில் மூதாட்டி ஒருவர் நிற்கிறார். கிழிந்த ஆடை. சற்றே உடைந்துபோன மூக்குக் கண்ணாடி நூல் சுற்றப்பட்டுக் காதுகளில் மாட்டப்பட்டுள்ளது. தன்னைக் கடந்து செல்கின்ற பாதசாரிகளைக் கைநீட்டி 'ஏம்பா,' 'ஏம்மா' என்று மெல்லிய குரலில் அழைத்த வண்ணம் இருக்கும் அவரை, ஆண்பெண் என்ற வேறுபாடு இல்லாமல் அவசரமாக கடந்து செல்கின்றனர் அனைவரும். நான் அவரருகில் சென்று 'என்னம்மா வேண்டும்?' என்று கேட்டேன். 'கொஞ்சம் அந்தப் பக்கம் கொண்டு போய் விடேன்!' என்று எதிர்த்திசையைச் சுட்டினார் மூதாட்டி. பிச்சைதான் கேட்கிறார் என்று முடிவு செய்து 'அச்சத்துடன்' இவரை அவசரமாக் கடந்த பலரில் எதிர்ப்பக்கம் செல்ல வேண்டியவர்களும் ஏராளம். அச்சம், அறியாமை, சோம்பல், பழக்கமின்மை, அவசரம், ஊக்கமின்மை போன்ற காரணங்களால் தாங்கள் எளிதில் செய்யக்கூடிய நற்காரியங்களையும் தவறவிட்டுத் தாங்கள் ஈட்டக் கூடிய

புண்ணியங்களைக் கோட்டை விடுபவர் ஏராளம் ஏராளம்.

பரபரப்பும் சுறுசுறுப்பும் மிக்க வாழ்க்கைப் பாதையில், நாம் செல்லும் வழிகள் தோறும், நிற்கும் இடங்கள் தோறும் நாம் செய்யக் கூடிய சிவ புண்ணியங்கள் ஏராளம் உண்டு. இவற்றை ஒருவன் தவறவிடாவிட்டால் இவை அனைத்தும் எளிதில் ஈட்டப்படுகின்றன.

பேருந்து நிறுத்தத்தில் வண்டிக்குள் இருக்கும் பயணி வெளியில் நோட்டமிட்டு சினிமா போஸ்டரைப் பார்க்கிறார்; அல்லது வெளியே இருவர் போடும் சண்டையினில் சிந்தையை ஈடுபடுத்துகிறார்; அருகிலேயே கோயில் ஒன்றும் இருக்கிறது. அதன் கோபுரத்தை உற்று நோக்கும் சிறிய செயல் பெரும் புண்ணியம் என்று இவருக்குத் தெரியவில்லையே! வானத்தை நோக்கி எழும் கோபுரமும் மதிற்சுவரில் வரிசையாக அமர்ந்திருக்கும் காளைகளும் 'உள்ளே இறைவன் திருமேனி கொண்டிருக்கிறான்' என்ற எண்ணத்தை யார் மனதில் ஏற்படுத்துகின்றனவோ அவர்கள் காசுசெலவின்றி, கடின உழைப்பின்றி இருக்கையை விட்டு இம்மியும் நகராமல் பெரும் புண்ணியத்தை ஈட்டுகின்றனர். 'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்'* என்று கேட்டிருப் பீர்களே! அப்படியானால் "அடுத்தமுறை சாவகாசமாக உள்ளே சென்று ஈசனைக் காண வேண்டும்" என்று யார் ஏங்குகிறார்களோ, அவர்கள் புண்ணியத்தை 'ஆயிரம் கோடி' என்று கூறலாம் அல்லவா?

---

* கோபுர தரிசனம் பாப விமோசனம் என்று கூறுவதும் உண்டு.

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
- திருஞானசம்பந்தர் (3.54.5)

''பரங்கருணைத் தடங்கலாகிய சிவபெருமான் 'வேண்டுதல் வேண்டாமை இலான்'. ஏழை, பணக்காரன்; ஆண், பெண்; புல், புழு, மனிதர், விலங்கு, பறவை, தேவர், நரகர், என்ற வித்தியாசங்களின்றி அனைத்து உயிர்களின் உள்ளத்திலும் அவன் உறைகிறான்; நாம் செய்யும் சிறு செயல்களை எதிர்நோக்கி அவன் கருணை புரிவதில்லை; இச் செயல்கள் அவன் கருணையைத் தூண்டும் ஆற்றல் அற்றவை. இறைவன் அருளே வடிவானவன். ஒரு குழந்தையையோ, பெண்ணையோ ஏமாற்ற முற்படுவதுபோல் அவனை ஏமாற்றல் ஆகாது. ஆண் பெண்கள் பரஸ்பரம் மயங்குவது அவரவர் வினைவயப்பட்டே ஆகும். இறைவன் எப்போதும் தன்வயத்தன் என்பதால் வினைவயப்படுதல் அவனுக்கு இல்லை. எனவே சிவபுண்ணியங்கள் என்பன இல்லை'' என்று சிலர் ஆட்சேபிக்கக் கூடும். ஆனால் இந்த ஆட்சேபம் 'கறிக்கு உதவா ஏட்டுச் சுரைக்காய்' என்பதை நடைமுறையில் அனைவரும் அறிந்து வைத்துள்ளனர்.

காலம், வினை இவற்றுக்கு உட்பட்டு ஆண்பெண்கள் பரஸ்பரம் மயங்குவதைப் போலன்றி, உயிர்களுக்கு இறைவன்பால் உள்ள கவர்ச்சி நித்தியமானது. இயற்கை (சுபாவம்)யானதும் கூட. ''ஆத்மா த்வம்; கிரிஜா மதி:'' என்பார் ஆதிசங்கரர். இதன் பொருள் 'ஈசன் பதி; உயிர் பத்தினி' என்பதாகும். ''பதிம் விச்வஸ்ய ஆத்மேச்வரம்'' என்று வேதம் கூறுவதும் இக்காரணம் பற்றியே ஆகும். மேற்படி வேதமொழியின் பொருள் 'இறைவன் உலகிற்கும் உயிர்கட்கும் நாயகன்' என்பதாகும். இறைவனைப் பற்றிய எண்ணத்தை உயிர்களிடத்தில் இறைவனே வைத்தான் என்று லினிட்ஸ் என்ற பிரெஞ்சு தத்துவஞானி கூறுகிறார்.

பக்குவியான உயிரை ஆட்கொள்ள இறைவன் குருவாக வரும்போது மேற்படிச் செயல் வெளிப்படையாக அமைகின்றது. இதனையே

''தன்னேர் இல்லோன் தானே ஆன தன்மை
என்னேர் அனையோர் கேட்கவந்து இயம்பி
அறைகூவி ஆட்கொண் டருளி
மறையோர் கோலம் காட்டி'' என்பார் மணிவாசகர்

எனவே சிவபுண்ணியங்கள் செய்யாதிருப்பது என்பது உயிர்களின் சுபாவத்திற்கு எதிரான ஒன்று. ஈசனிடத்தில் உயிர்களுக்கு உள்ள இயற்கையான கவர்ச்சியின் அடிப்படையில் உயிர்கள் சிவபுண்ணியங்களைச் செய்கின்றன. இல்லையெனில் எறும்பும், யானையும், எலியும், சிலந்தியும் சிவபுண்ணியம் செய்யுமா? ஆத்ம ஞானியான பகவான் ஸ்ரீரமண மகரிஷிகளும் அண்ணுமலையைச் சுற்றிச் சுற்றி வந்தாரே!

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல் (திருக்குறள் 33)

## செய்து பழக வேண்டும்

தவமும் தவமுடையார்க்கு ஆகும்; அவமதனை
அஃதிலார் மேற்கொள்வது

- திருக்குறள் 262

எந்த ஒரு செயலைச் செய்வதனுலும் விளையும் பயன்கள் இரண்டு. ஒன்று அதனுல் விளையும் புண்ணியம் அல்லது பாவம். இரண்டாவது, மீண்டும் அச் செயலைச் செய்ய வேண்டும் என்று (பெரும்பாலும் நாம் அறியாமலேயே) எழும் வாசனை. இந்த வாசனையே உயிர்கள் 'இயல்பாகப்' பல செயல்களிலும் ஈடுபடுவதற்குத் தூண்டுகோலாக அமைகிறது.

காசிக்கோ, ஹரித்வாருக்கோ செல்பவன் கங்கையில் நீராடா விட்டால் நஷ்டம் யாருக்கு? கங்கைக்கா? திருவையாறு செல்பவன் காவிரியில் குளிக்காவிட்டால் காவிரி கோபித்துக் கொள்ள மாட்டாள். ஆனால் இவன் பாவம் தொலையாது. கங்கையும் காவிரியும் இன்னாருக்கு என்று ஓடுவதில்லை. கண்ணில் தெரியும் புண்ணிய நதியில் ஒருவன் தவறாது ஸ்நாநம் செய்ய வேண்டுமெனில் அவனுக்கு ஏற்கெனவே தீர்த்தஸ்நாநம் செய்த பழக்கமிருக்க வேண்டும். ஆகவே நாம் அனைவரும் நல்ல வாசனைகள் ஏற்படும் வண்ணம் நற்காரியங்களைச் செய்து இக்கணம் முதல் பழகுதல் அவசியம்.

ஓரிடத்தில் கவிந்திருக்கும் இருட்டினைக் கைவலிக்கத் துடைப்பத்தால் திரட்ட முடியாது. ஆனால் விளக்கு ஒன்றினை ஏற்றிய அளவில் அவ்விருட்டு தொலைகிறது. அதுபோலவே நல்ல வாசனைகளே தீய வாசனைகளுக்கு மாற்றாகும். நமக்கு நாம் உதவுவதென்றால் சிவபுண்ணியங்களை இடைவிடாது செய்வதன்மூலம் பாவங்களை அருகில் அண்டவிடாமல் உய்யலாம்.

புனைகின்றேன் பொய்ம்மை தன்னை;
மெய்ம்மையைப் புணர மாட்டேன்
எனக்கு நான் செய்வ தென்னே?

என்பார் அப்பர் சுவாமிகள். நூறடி தோண்டினாலும் சில இடங்களில் நீர் அகப்படுவதில்லை. ஈட்டியைப் போட்ட அளவில் ஓரிடத்தில் நீர் பீறிட்டெழுகிறது. அவ்விடத்தில் ஊற்றுக்கண் இருப்பதாக அறிகிறோம். சென்ற பிறவிகளில் செய்த சிவ புண்ணியங்களின் வலிமையால் முயற்சியின்றி இப்பிறவியில் சிவ தரிசனமும் சிவ கைங்கரியமும் கிட்டுகின்றன. எனவே சோம்பலின்றி இப்போதே நம்மாலியன்ற சிவ புண்ணியங்களைச் செய்வோமா?

என்ன மாதவம் செய்தனை, நெஞ்சமே?
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெலார்வயல் சேறையுள் செந்நெறி
மன்னு சோதி நம்பால்வந்து வைகவே. (5.77.2)
- அப்பர்

# நிலவொளியும் வெயிலொளியும்

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம் - திருக்குறள் 77

காட்டிலும் மேட்டிலும் கடல்மீதும் மலைமீதும் குடிசையிலும் கோபுரத்தின் மேலும் இனிமையாய்க் காய்கிறது நிலா. அதைப்போல் உயிர்கள் அனைத்தும் ஆணவமலக் கட்டிலிருந்து விடுபட்டு உய்ய, அருளே வடிவாக, அனைவர்க்கும் பொதுவாக இறைவன் 99% செயல்களைச் செய்து விட்டிருக்கிறுன். இதனைச் சம்பு பக்ஷம் என்பார்கள். ஒவ்வோருயிரும் தனக்குத் தான் செய்ய வேண்டிய உதவி 1% மட்டுமே. இந்த 'சாதனை'யை அணுபக்ஷம் என்று கூறுவார்கள். ஓடுகின்ற காவிரி சம்பு பக்ஷம்; நாம் சென்று குளிப்பது அணுபக்ஷம். எங்கும் இருக்கும் திருவருளைத் துய்க்க நமக்கு நாமே ஈட்டிக் கொள்ளும் தகுதி, சிவபுண்ணியங்களால் அமைகிறது.

இறைவன் அருள்வடிவாகிய நிலவு என்ருல் அதே சமயம் அறவடிவாகிய வெயிலும் அவனே. வெயிலொளியிலிருந்தே தாவரங்கள் உணவைத் தயாரிக்கின்றன. இவ்வுணவையே ஏதாவதொரு வடிவில் எல்லா உயிர்களும் உண்டு வாழ்கின்றன. ஆனுல் முதுகெலும்பில்லாத புழு இவ்வெயிலால் வருத்தப்படுகிறது. அறமே உலகை நடத்துகிறது. உயிர்களை வாழவைக்கின்றது. அதுவே அறவழியில் நில்லாதாரைத் துன்புறுத்தவும் செய்கிறது. இஃதும் இறைவனின் மறக் கருணையே! அருளும் அறமும் பரமன் என்ற நாணயத்தின் இரு பக்கங்கள். ஒரு பக்கத்தை ஒடித்தால் இன்னெரு பக்கமும் ஒடியும்.

தன்னை நாடிவரும் அன்பர்களிடம் ''நாளைக்கு'' என்று ஈசன் கூறுவதில்லை.

''தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம்
பின்னை என்ஞர் பெருமான் அடிகளே'' (5.38.2)

என்கிறது திருக்கடவூர் மயானத் தேவாரம். ஆனுல் திருவருளைத் துய்க்கும் தகுதி நம்மிடம் இல்லை எனில் என்

செய்ய?

''வழங்குகின்றுய்க்கு உன் அருளாரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேன் என் விதி
இன்மையால்''

திருவாசகம் (8.24.10) என்று முறையிடுவார் மணிவாசகர்

ஈசனை எளிதில் திருப்திப் படுத்தலாம். அவன் ஆசுதோஷி. ஆனுல் ஒன்றும் அறியாத 'மக்கு' அல்லனே! அவன் ''வேட்கையாற் பரவும் தொண்டர் அடிமையை அளப்பான்'' (4.56.5) என்றும் ''உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிவான்'' என்றும் (4.75.3) அவன் செய்கையை நன்கறிந்த அப்பர் பெருமான் அறிவிக்கிறுர். அம்மட்டோ? நண்பர்களே! நம் செயல்களையும் செயலின்மையையும் அவன் கணக்கும் எடுக்கிறுன்! உஷார்!

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின் ருரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே (5.21.8)

\- அப்பர்

## சிவபுண்ணியத் தெளிவு

மருந்து வேண்டில் இவை; மந்திரங்கள் இவை
புரிந்து கேட்கப்படும் புண்ணியங்கள் இவை!

\- திருஞானசம்பந்தர் (3.25.1)

வேதங்களை மூச்சுக் காற்றுகக் கொண்ட சிவ பெருமான், பக்குவியான ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு அருளிய நூல்கள் ஆகமங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவை எண்ணிக்கையற்றவை.

'அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடி நூறுயிரம்' என்றும்
'எண்ணில் எழுபதுகோடி நூறுயிரம்' என்றும்
'எண்ணிலி கோடி' என்றும் திருமூலர் கூறுவார்.

இவற்றுள் 'காமிகம்' முதலிய பிரதான ஆகமங்கள் இருபத்தெட்டென்றும் இவற்றுக்கு உபாகமங்கள் இரு நூற்றேழு என்றும் அறிகிறோம். இவ்வாகமங்கள் ஈசனல் அம்பிகைக்கும் ஏனையோருக்கும் உபதேசிக்கப்பட்டவை. இவற்றுள் ஒன்பது ஆகமங்கள் திரு நந்திதேவருக்கு உபதேசிக்கப்பட்டவை. அவை திருமந்திரத்தில் கண்ட வண்ணம் (62 & 63)

நவ ஆகமம் எங்கள் நந்தி பெற்றனே-
பெற்றநல் ஆகமம் (1) காரணம் (2) காமிகம்
(3) உற்றநல் வீரம் (4) உயர்சிந்தம் (5) வாதுளம்
(6) மற்றவ் வியாமளமாகும் (7) காலோத்தரம்
(8) துற்றநற் சுப்பிரம் (9) சொல்லும் மகுடமே'' என்பன.

இவற்றுள் 'உயர்சிந்தம்' என்று சிறப்பிக்கப்பட்ட சிந்தியாகமத்தின் உபாகமமாகிய விசுவ சாதாக்கியம் என்னும் நூலில் ஈசன், திருநந்தி தேவரிடம்

''உலகினுக்கு இதமதாயும் உயிர்க்கு உறும் சித்தியாயும்
பலமுறக் கொடுப்பதாயும் பகரும் உத்தமம் அதாயும்
குலவுபுண்ணியத்தைக்'' கூறினன். அவ்விஷயத்தைத்
தமிழில்

**'சிவபுண்ணியத் தெளிவு'** என்னும் நூல் கூறுகிறது. அந்நூல் காப்புச் செய்யுள் நீங்கலாக 143 பாடல்களால் ஆனது. அந்நூலில் காட்டப்பட்டுள்ள சிவபுண்ணியச் செயல்களும் மற்றும் அவற்றுக்கான பலன்கள் இந்நூலில் புதிய முறையில் வரிசைப் படுத்தப்பட்டுத் தரப்பட்டுள்ளன. ஆங்காங்குப் பழைய நூலின் பாடல் எண் (தெளிவு எண்) என்ற அடிப்படையில் அடைப்புக் குறிக்குள் தரப்பட்டுள்ளது.

**காப்பு**

பழகிய பதித்துவப் பான்மை எய்தவும்
முழுகிய பசுத்துவம் முற்றும் நீங்கவும்
ஒழுகிய மும்மதத் தொளிகொள் ஞானமார்
அழகிய பிள்ளையார் அடிகள் போற்றுவாம் (தெளிவு 0.)

### ஸபாநாதர் துதி

உலகினும் உயிரினும் ஒன்றி நின்றருள்
குலவிய ஒளிஉயிர் குறிக்க ஐந்தொழில்
இலகிய மன்றினுள் எழில்நடஞ் செய்வோன்
வலமிகு மலரடி வாழ்த்துவாமரோ. (தெளிவு.1)

### திருநந்திதேவர் துதி

ஓதுமுப் பொருளையும் உணர்ந்து நாற்பதத்து
ஆதி ஆகமம்தழீஇ அதனைப் பன்னிரு
போத சூத்திரமதாப் புகன்ற நந்திதன்
பாத பங்கயமலர் பணிந்து போற்றுவாம் (தெளிவு.5)

முப்பொருள் = பதி, பசு, பாசம்
நாற்பதம் = சரியை, கிரியை, யோகம், ஞானம்
பன்னிரு போத சூத்திரம் = சிவஞான போதம்

### ஆகமக் கல்வியின் பலன்

உலகின் முதலாகிய சிவபெருமான் ஐந்தொழில் களையும் விளையாட்டாகச் செய்பவன். அவன் உயிர்களுக்கு ஞானத்தை மறைக்கின்ற ஆணவத்தினைப் போக்குவதற் கென்றே ஆகமங்களை உரைத்தான். அந்த ஆகமங்களை உணர்ந்தார் தமக்கே குற்றமில்லா அறிவையும் வீட்டின் பத்தையும் கொடுக்கிருன். (தெளிவு.79)

### சிந்தியாகமத்தின் சிறப்பு

கல்வியில் மேம்பட்ட ஆசிரியன் மூலம் சிந்தி யாகமத்தைப் பணிவுடன் பயின்றவர்கள் இப்பிறப்பிலேயே மலங்களின் நீங்கிச் சிவத்தோடு ஒன்றுவர். (தெளிவு.80)

### இந்நூலை ஏன் படிக்கவேண்டும்?

படிக்கும்போது சுவைபயக்கும் கதை, கவிதை, கட்டுரை, நாடகம், நவீனம், பத்திரிகைகள் இருக்க இந்நூலை ஏன் படிக்க வேண்டும்? பிற நூல்கள் படிக்கும்போது இன்பம் பயந்தாலும் அவற்றின் பயன் நரகமே! (இறைவனின் நினைவின்றி இருப்பது நரகந்தானே?) இந்நூல் படிப்பதற்குச் சுவை பயக்காவிடினும் நல்ல சிவகதியைக் கொடுக்க வல்லது. இறைவனின் புகழைக் கருதாவிடின் தேவர்கள் மொழியாயினும் அது பழியுடைய மொழியே. சிவ புண்ணியங்களைக் கூறும் இந்நூல் அழியாப் புகழுடையதே யாம். (தெளிவு 18; 19) '**ஐயே, மெத்தக் கடினம்**' என்ற தலைப்பின் கீழுள்ள கருத்துக்களையும் காண்க.

## அடித்தளமும் கட்டிடமும்

மண்ணின் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்;
எண்ணின் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணின் நல்லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே!

(3.24.1) - திருஞானசம்பந்தர்

'சொந்தமாக' வீடு கட்டிக் கொண்டு அதில் 'சுகமாக' வாழ விரும்பாதவர் இன்றைய உலகில் யார் இருக்க முடியும்? 'வீடு நமக்குத் திருஆலங்காடு' என்ற எண்ணங்கொண்ட பட்டினத்தார்கள் இன்று அனேகமாக இல்லை. துறவிகள் கூட இடம் வாங்கிக் கட்டிடம் எழுப்புகிறார்கள். உயர்ந்த கட்டிடம் எழுப்ப வலுவான அடித்தளம் தேவை; அடித்தளம் பலகீனமாக இருந்தால் கட்டிடம் ஆட்டம் காணும். ஆனால் அடித்தளம் மட்டும் இருந்தாலும் போதாது. அடித்தளத்தில் குடித்தனம் செய்ய முடியுமா? அதற்குச் சமையற்கட்டு, குளியலறை, வரவேற்பறை, படுக்கையறை இத்யாதி தனித்தனியே அமைந்த கட்டிடம் வேண்டுமே!

வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கும் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுவதற்கும் அறம் காரணமாகிறது ; இந்த அறம் 'பொது' என்றும் 'சிறப்பு' என்றும் இருவகைப்படுகிறது; பொது அறம் (அ) ஸாமான்ய தர்மம் கட்டிடம் எழுப்பத் தேவையான அடித்தளம் போன்றது. சிறப்பு அறம் (அ) விசேஷ தர்மம் குடுத்தனம் செய்யத் தேவையான கட்டிடம் போன்றது, இதுவே சிவபுண்ணியம். பொது அறம் அனைவர்க்கும் பொதுவானது, வாய்மை, தூய்மை, கள்ளாமை, அகிம்சை, பொறை, துறவு, ஈகை, வன்சொல் மொழியாமை என இங்ஙனம் விரிகின்ற பொது அறத்தினை (திருக்குறள் அறத்துப்பால் முதலிய) அதற்கானப் ப்ரத்யேக நூல்களில் காண்க. இச்சிறுநூலில் சிவானந்தமாகிய வீட்டின்பத்திற் சென்று சேர்க்கக் கூடிய சிவபுண்ணிய மென்கிற சிறப்பறத்தை மட்டிலும் காண்போம். பொதுவாகிலும் சிறப்பாகிலும் அறம், தவம்-தானம் என்ற இருபெரும் பிரிவுகளில் அடங்கும்; தவம் காயத்தாலும், மொழியாலும், மனத்தாலும் செய்யக் கூடியது. தானம்

பொருளைக் கொண்டு, தக்க பாத்திரத்தைக் குறித்துச் செய்யக் கூடியது. காயத்தால் ஈட்டக்கூடிய சிவபுண்ணியங்களில் ஆரம்பித்து இவற்றை முறையே காண்போம். முதலில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்குச் செல்வோமா? வாருங்களேன்!

## ஆலயம் தொழுவது சாலவும் நன்று

ஆக்கையாற் பயனென்? - அரன் கோயில் வலம்வந்து

பூக்கையால் அட்டிப் 'போற்றி' என்னாத இவ்ஆக்கையாற் பயன் என்?

கால்களால் பயன் என்? கறைக்கண்டன் உறை கோயில்

கோலக் கோபுரக் கோகரணம் சூழாக் கால்களாற் பயனென்?

அப்பர் (4.9.8 & 9)

**கோபுர தரிசனம்**

தூரத்தே தெரிகின்ற சிவாலயத்தின் உயர்ந்த கோபுரத்தை உள்ளத்தில் ஊறும் அன்புடன் தரிசித்து மகிழ்வோருக்கு, உடல்கள் தோறும் உயிரினைப் புகுத்திச் சிறைப்படுத்துகின்ற பாவமானது அக்கணத்திலேயே தீரும் (தெளிவு 29)

**ப்ரதக்ஷிணம் (வலம் வருதல்)**

வெகுதூரம் நடந்துவந்த இளைப்பினோடு சிவபிரான் திருக்கோயிலை வலஞ்செய்வோர்கள் முன்னர் அறிந்து செய்த பாவங்களும் அழிந்து, அரிய தவத்தை எய்துகிறார்கள். (தெளிவு 30)

இதனால் வாகனத்தில் வருவோர்கள் கோயில் வாயில் வரை வாகனத்தில் வராமல், வாகனத்தைத் தொலைவில் நிறுத்திவிட்டு, நடந்தே கோயிலுக்கு வர வேண்டும். கூடியவரை, கோபுரத்தைத் தொலைவில் தரிசித்தது முதல் நடந்தே வரவேண்டும். இது காயத்தால் செய்யும் தவம் அன்றோ?

பாசப்பகைவனாகிய பரமசிவனின் ஆலயத்தைத் தினமும் மூன்று முறை வலம் கொண்டால், பேசற்கரிய பெருந்தவயோகிகளுடன் உறையும் சிவபிரானின் அருகிலேயே இருக்கும் 'சாமீபம்' என்ற இன்பம் கிடைக்கும் (தெளிவு 40) சிவாலய தரிசனத்தின்போது ப்ரதக்ஷிணமோ,

நமஸ்காரமோ குறைந்தது மூன்று முறை செய்ய வேண்டும். ஒரு முறையோடு நிறுத்திவிட்டால் 'அட, கஞ்சன் இவன்! என்று நம்மைப் பற்றி சுவாமி நினைக்கக் கூடும் அல்லவா? தினமும் கோயிலுக்குச் சென்று வலம்வர முடியாவிடில், திங்கள்கிழமை, ப்ரதோஷம், காலாஷ்டமி, பௌர்ணமி என்று விசேஷ புண்ய தினங்களிலாவது செல்ல வேண்டும். ஸ்வாமியின் அபிஷேக நீரைத் தாண்டாத வகையில் நந்தி முதல் சண்டிகேசர், பின்னர் சண்டிகேசர் முதல் அப்ரதக்ஷிணமாக நந்தி வழியாகச் சண்டிகேசர், மீண்டும் நந்தி என்று செய்யப்படும் பிரதக்ஷிணம் சோமசூத்திரம் என்று கூறப்படும். பிரதோஷ காலத்தில் இது விசேஷமாகக் கூறப்பட்டுள்ளது. கேரளத்தில் உள்ள அம்பலங்களில் சிவாபிஷேக நீரைத் தாண்டுவதற்கு அனுமதிப்பதில்லை. இதுபோலவே வேறுபல மாநிலங்களிலும் அனுமதிப்பதில்லை.

**நமஸ்காரம்**

நமஸ்காரம் ஐந்து வகைப்படும். தலையை மட்டும் தாழ்த்துவது ஏகாங்கம். இதனுடன் தலையின் மேல் வலக்கரத்தைக் குவித்தல் துவிதாங்கம். இருகரங்களையும் தலையின் மேல் குவித்தல் திரிவிதாங்கம். தலை, இருகரங்கள், இரு முட்டிக்கால்கள் நிலத்தில் பட வணங்குதல் பஞ்சாங்கம், தலை, மோவாய், இருகரங்கள், இரு காதுகள், இரு கால்கள் நன்கு நிலத்தில் பொருந்த வணங்குவது அஷ்டாங்கம் எனப்படும் (தெளிவு 38)

மேலே சொன்ன ஐந்து விதங்களாலும் இறைவனை வணங்கி வழிபடுவோர் உலகின் மேம்பட்டுப் பிறர் தம்மை வணங்கும் சிறப்பினை எய்தி, **"ஸாலோகம்"** முதலிய பலன்களை முறையே அடைவர் (தெளிவு 39)

*"வாழ்த்துவதும் வானோர்கள் தாம்வாழ்வான் ; மனம்நின்பால்*
*தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மை எலாம் தொழ வேண்டி;"*
*(8.5.16)*

என்று திருவாசகமும் கூறுவதைக் காண்க.

**திருமேனி காண்டல் (சிவலிங்க தரிசனம்)**

மேருமலையளவு சுவர்ணதானம், நூறுகோடி

கன்னிகாதானம், ஒரு கோடி கோதானம் ஆகியவற்றின் கூட்டுப் பலனை இறைவனின் திருமேனித் தரிசனம் ஈட்டித் தருகிறது *(தெளிவு 47)*

**திருமேனி தீண்டல் (ஸ்பரிசம்)**

ஈசனிடத்தில் பேரன்போடு அவன் விளங்கும் இலிங்கத்தைத் தீண்டினால் பாவம் அழிந்து, மூல மலமும் கெட்டு, இரசவாதக் குளிகையினால் செம்பு களிம்பு நீங்கிப் பொன்னாவதைப் போல் பேசற்கரிய ஆனந்தத்தை அடைவர் *(தெளிவு 48)*

ஆலயத்தில் உள்ள இலிங்கத் திருமேனியை அனைவரும் சென்று தீண்டுவது என்பது தென்னாட்டில் இல்லை. முப்போதும் திருமேனி தீண்டுவார் ஒரு சிலரே. வடநாட்டில் சிலபல ஆலயங்களில் அபிடேகாதி உபசாரங்களுடன் அனைவரும் பூசிக்கும் முறை உள்ளது.

எனவே தீண்டுதல், அலங்கரித்தல், நீராட்டுதல் என்ற வகையில் கூறப்பட்டுள்ள புண்ணிய பலன்களை, அவரவர் தாம் பூசிக்கும் ஆத்மார்த்த மூர்த்திக்குச் செய்வதாகக் கருதி **'சிவபூசை'** என்ற தலைப்பில் இனிக்காணலாம். அல்லது மேற்படி புண்ணியங்களை ஆலயத்தில் உள்ள சிவாசாரியர் மூலம் செய்வித்துப் பெறலாம். இவ்வகையில் அபிடேகம், மற்றும் அலங்காரத்துக்குரிய பொருள்களைத் தருவதால் அவை தானத்தின் பாற்படும்.

**தரிசித்தபின் துதித்தல்**

வறிஞர், செல்வந்தர் என்றில்லாமல் எந்நிலையில் இருப்போரும், ஒரு பொழுது சிவாலயத்துட் சென்று ஈசனைக் கண்டு களிப்புடன் வாயார வாழ்த்தினால் இம்மையில் பலவிதமான செல்வங்களை எய்தி முடிவில் முத்தியும் அடைவர் *(தெளிவு 62)*

மேலும் **'வாழ்த்த வாயும்'** என்ற தலைப்பின்கீழ்க் காண்க.

**இறைவன் திருமுன்பு ஆடுதல்**

சிவபிரான் திருமுன்பு நடனமிடுபவர் சிவலோகஞ் சென்று அரம்பையரின் நடனத்தைக் கண்ணுறுவர் *(தெளிவு 116)*

## ஆலய தீர்த்தம்

சுத்தமாயிருப்பினும் அசுத்தமாயிருப்பினும் திருக்குளம் முதலிய ஆலயத்தின் அருகில் உள்ள புண்ணிய தீர்த்தங்களில் முகஞ்சுளியாது அவற்றைத் தேவர்கள் தோயும் வானகங்கை என்றெண்ணி நீராடினால் ஏழு பிறவிகளிற் செய்த பாவம் தீரும். (தெளிவு 43)

திருக்குளங்களைத் தூய்மையாக வைத்திருப்பது நம் கடமை ஆகிறது. அவற்றில் பல் துலக்குவது, எண்ணெய், சீயக்காய், சோப்பு கலக்கக் குளிப்பது, துணி துவைப்பது, கரையோரங்களில் சிறுநீர், மலம் கழிப்பது முதலியன பெரும் பாவங்களாகும். பலரும் செய்கிறார்களே, நான் ஒருவன் செய்யாவிட்டால் சுத்தமாகி விடுமா என்று நினைக்கவோ, பேசவோ, செய்யவோ கூடாது. அவரவர் பசி அவரவர் உணவருந்த நீங்குதலைப் போல அவரவர் தாந்தாம் பாவமீட்டாதிருக்க வேண்டும். உங்கள் ஊரில் உள்ள திருக்குளத்தை எவரும் அசுத்தம் செய்யாதிருக்க ஆளுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து ஒரு காவற்காரரைப் போடலாமே!

## ஆலயத்தை அலகிடுதல் (தூய்மை செய்தல்)

சிவாலயத்தையோ குருவின் மடாலயத்தையோ ஒரு நாள் அலகிட்டால் சாந்திராயண விரதத்தை அனுட்டித்த பலனை அடைவர் (தெளிவு 96) ஒரு பட்சம் (15 நாள்) அலகிட்டால் அவர்கள் சதகோடி திவ்விய யுகங்கள் உருத்திரன் உலகில் வசிப்பர் (தெளிவு 97)

## அலகிட்டபின் பசுவின் சாணத்தால் மெழுக்கிடுதல் பத்து மடங்கு பலன்

விளக்கினாற் பெற்ற இன்பம் மெழுக்கினால் பதிற்றி ஆகும் (அப்பர்)

**மலர்மாலை தொடுத்துக் கொடுத்தல் சுவர்க்கத்தைத் தரும்.**

*துளக்கில் நல் மலர் தொடுத்தால் தூயவிண் ஏறல் ஆகும் (அப்பர்)*

**திருவிளக்குப் போட்டால் உண்மை ஞானம் உதிக்கும்**

*விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ஞ்ஞெறி ஞானம் ஆகும் (அப்பர்)*

**இறைவன் புகழைப் பாடினால் சாயுஜ்யம்**

*அளப்பில கீதம் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே (அப்பர்)*

***மாணிக்க வாசகர் காட்டும் மங்கையர் மாண்பு***

*ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன், அன்புருகேன்;*
*பூமாலை புனைந்தேத்தேன்; புகழ்ந்துரையேன்; புத்தேளிர்*
*கோமான் நின் திருக்கோயில் தூகேன், மெழுகேன்;கூத்தாடேன்*
*சாமாறே விரைகின்றேன்*

*(திருவாசகம் 8.5.14)*

என்று உருகுகின்றார் மணிவாசகப் பெருந்தகையார்.

நெற்றியில் வெளிப்படத் திருநீறும் இடமுடியாத நாட்டில் 'ஆமாறு' ஆகங்குழைந்து அன்பால் உருகியவர் மங்கையர்க் கரசியார்; பூமாலை புனைந்தவர் சங்கிலியார்; புகழ்ந்துரைத்தவர் காரைக்கால் அம்மையார்; திருக்கோயில் அலகிட்டு மெழுகியவர் திலகவதியார்; திருமுன்னர் கூத்தாடியவர் பரவையார்.

## திருவிழாக்கள்

தீர்த்தமாம் அட்டமிமுன் சீர்உடை ஏழுநாளும்
கூத்தராய் வீதி போந்தார் குறுக்கை வீரட்டனாரே.

- (அப்பர்) - (4.50.2)

அடியார்க்கு எளியனாகிய இறைவன், ஆலயத்துக்கு வந்து தரிசிக்காத பலருக்கும் அருள் சுரக்கத் திருவிழாக் காலங்களில் வெளியே உலாவருகிறான். அவ்வமயம் பாராமுகமாயும், படுத்துத் தூங்கிக் கொண்டும் இருப்பவர்கள் பாவத்தை ஈட்டுகின்றனர்.

திருவிழாக்களில் ஈசனை வலம்வந்தால் ஒவ்வோரடிக்கும் அசுவமேதப் பலன் கிட்டும்( தெளிவு 34) ஏதாவது ஒரு காலம் வலம் வந்தாலும் ஏழு பிறவிப் பாவம் போகும்; திருவிழாவில் நாள் தோறும் வலம் வருபவர் உருத்திரப் பதவியை அடைவர் (தெளிவு 37)

திருவிழா ஆரம்பத்தில் இடபக் கொடி ஏற்றப்படும்; அவ்வமயம் அக்கொடிப் பின் சென்று வலம் வருவோர்க்கு பூமி, பொன், புத்திரர், பௌத்திரர் முதலிய செல்வம் பெருகும். (தெளிவு 35)

இடபக் கொடியை ஏற்றும் காலத்துச் செய்யப்படும் நிவேதனமான இடப நிவேதனத்தை அன்போடு ஏற்று அருந்தும் பெண், மலடி என்று நிச்சயிக்கப்பட்டிருந்தாலும் சிறந்த மகவைப் பெற்றெடுப்பாள் (தெளிவு 36)

## ஈசா வாஸ்யமிதம் ஸர்வம்

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை; பிறந்து,மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை; இடை நடுவில்
குறிக்குமிச் செல்வம் சிவன்தந்ததென்று கொடுக்கறியாது
இறக்கும் குலாமருக்கு என் சொல்லுவேன் கச்சி ஏகம்பனே.

(பட்டினத்தார்)

இனி ஈசனைக் குறித்த தானங்களைக் காண்போம்.

சிவாலயத்தில் பயன்படுவதற்காக நறுமலர் நந்தன வனம் அமைத்தால் இலக்குமி கடாட்சம் உண்டாகும்; முடிவில் உருத்திர பதம் எய்தும். (தெளிவு 51)

இறைவனுக்கு உரிய அபிடேக நீருக்காக வழிவகை செய்தோர் உருத்திர லோகம் அடைவர் (தெளிவு 57)

ஒலிக்கின்ற சங்கு, பலவகை வாத்தியங்கள், சாமரம், வாள், கண்ணாடி, குடை, ஆடை, தங்கம், தாமிர பாத்திரம் ஆகியவற்றை ஈசனுக்கெனக் கொடுத்தால் வறுமை நீங்கி வளம்பெற்று உருத்திர லோகம் பெறுவர். (தெளிவு 64)

ஒலிக்கின்ற மணியும் அதற்கான மண்டபத்தையும் அமைத்துக் கொடுத்தால், செல்வம், நாடு, புகழ் எய்தலாகும். (தெளிவு 65)

இறைவனுக்கு இருக்கை (ஆசனம்), சயனம் (பள்ளியறை) ஊர்ந்து செல்ல வாகனம், ஏறிச் செல்ல சிவிகை

இவற்றை அளிப்பதால் சாமீபம் கிட்டும்
(தெளிவு 66)

நாடகசாலை, திருமதில், கோபுரம், மண்டபம் முதலியன கட்டுவித்தால் இறைவனை ஒத்த உருவத்தை அடைவர். சாரூப்யம் பலன். (தெளிவு 67)

திருவாபரணங்கள், தீப தூபங்கள் நல்கினோர் எல்லா நலன்களையும் துய்த்து நல்வினை எய்துவர். (தெளிவு 68)

ஒரு பசுவின் தோல் அளவிற்கு ஈசனுக்கென்று பூதானம் செய்தவர்கள் உள்ளத்தில் தீவினை ஒழிந்து புண்ணிய உலகங்களை எய்துவர். (தெளிவு 69)

நீர் வளத்துடன் கூடிய விளைநிலத்தையும், விண்ணளவு ஓங்கிய பூஞ்சோலையையும் கொடுத்தால் உலகில் விளங்கும் பல்வகை இன்பங்களும் பெருகும்.
(தெளிவு 70)

ஈசனுக் கென்று வாவி, குளம், கிணறு ஆகியவற்றை அமைத்தால் குறைவில்லாத செல்வத்தோடு பூமியில் வாழ்ந்து சிவனுலகம் செல்வர். (தெளிவு 73)

சாமரம், தண்டுலம் (அரிசி), தீபம், ஆடை, கனி, மலர் ஆகியவற்றை ஈசனுக்கோ, ஆசானுக்கோ கொடுத்தால்

ஒவ்வொர் அரிசிக்கும் மலருக்கும் ஓராயிரம் யுகம் சிவபுரத்தில் பொலிவர் (தெளிவு 90; 91)

உத்யான வனம் அமைத்தோர் அவ்வனத்தில் அமைந்த ஒவ்வோர் இலை, மலர் கனிக்கும் ஒவ்வோர் யுகம் சிவபுரத்தில் மகிழ்வர் (தெளிவு 92)

ஈசனுக்கோ, குருவுக்கோ பொன் அளித்தவர் இந்திரன் உலகையும், மணி (இரத்தினம்) அளித்தவர் சத்திய லோகத்தையும் அடைவர் (தெளிவு 105)

பேரி, முரசம், மிருதங்கம், திமில், படகு, சங்கு, தாளம், தனு, காகளம், குழல், வீணை ஆகியவற்றை வழங்கு வோர் பிரமனை நிகர்த்து, பதிணுயிரம் கற்ப காலம் அவன்பதியில் வதிவர் (தெளிவு 111; 112)

முத்து, இரத்தினங்களால் இறைவன் கோயிலையும், குருவின் மடாலயத்தையும் வளம்படுத்தியவர் பற்பல நல்உலகங்களை அடைந்து நெடுங்காலம் அமர்வர் (தெளிவு 113)

பழுதடைந்துள்ள சிவாலயங்கள், மடாலயங்கள், சிவ லிங்கங்கள், தீர்த்தங்கள் ஆகியவற்றைப் பழுதுபார்த்து முன்போலச் செப்பஞ் செய்தவர்கள் இவற்றை முன்னர் கட்டுவித்தோர்கள் எய்திய பலன் போல் ஆயிரம் மடங்கு எய்துவர் (தெளிவு 81)

மேற்கூறியவற்றில் சிதிலமான அவ்வப் பகுதிகளை மட்டும் செப்பம் செய்வோர், முன்னர் நிர்மாணித்தவரைப் போல் நூறுமடங்கு பலனை அடைவர் (தெளிவு 82)

## சிவ பூசை

காயமே கோயி லாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி இலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனுர்க்குப் போற்று அவிக் காட்டினேமே! (4.76.4)
- அப்பர்

மனம், வாக்கு, காயம் என்ற முக்கரணங்களாலும்

தவமும் தானமும் பொருந்தச் செய்வது சிவபூசை. மனிதர் அனைவரும் சமயதீட்சை பெற்று அன்றுடம் சிவபூசை செய்வது சிறப்பு. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களும் சிவபூசையில் உண்டு. நீராடித் தூய ஆடை அணிந்து அஞ்செழுத்தை யோதித் திருநீறு அணிதல் வேண்டும்.

''மந்திரம் நமச்சிவாய ஆக நீறணியப் பெற்ருல்
வெந்து அறும் வினையும் நோயும் வெவ்வழல்
விறகிட்டன்றே''

- அப்பர் (4.77.4)

சிவபூசையினுல் பெரும் பாவங்களும் தொலைகின்றன; பிரமகத்தி, குருகத்தி, பசுகத்தி, புத்ரகத்தி, பித்ருகத்தி, மாத்ருகத்தி, மித்ரகத்தி, குருபத்தினி கமனம், பிறன்மனை சேரல் முதலிய மாபாதகங்கள் நீங்க வேண்டின் சிவபூசையினுல் மட்டுமே நீங்கும் (தெளிவு 61)

மானதமண்டலம், கணிகம், பலகை, படம், பித்தி, எழுதும் சித்திரம், இரதம், வேரம் என்ற எட்டிலும் இறைவனைப் பூசிக்கலாம். இவை முறையே ஒன்றைவிட மற்றென்று மேலான பலனைத் தரும். இவையனைத்தையும் விட படிகமும் பாணமும் மேம்பட்டவை. ஞானமயமான இலிங்கம் அனைத்துப் பாவங்களையும் எரிக்கும்.

(தெளிவு 60)

இறைவனை எழுந்தருளச் செய்தல் (ஆவாகனம்), எண்ணுதல் (தியானம்), இருக்கை அளித்தல் (ஆசனம்), கால் அலம்ப நீரளித்தல் (பாத்யம்), கைகளில் நீரளித்தல் (அர்க்யம்), அருந்த நீரளித்தல் (ஆசமனீயம்), நீராட்டுதல் (அபிஷேகம்), ஆடை அளித்தல் (வஸ்திரம்), பூணுல் அணிவித்தல் (உபவீதம்) திருநீறு அணிவித்தல், வாசனைச் சந்தனம் அணிவித்தல், அலங்கரித்தல், மலர்மாலை அணி வித்தல், மலர்களால் அருச்சித்தல், நறிய புகையூட்டுதல் (தூபம்), பல்வகை விளக்கொளிகள் காட்டுதல் (தீபம்) உணவூட்டுதல் (நைவேத்யம்) வெற்றிலை பாக்கு அளித்தல் (தாம்பூலம்) கற்பூரச் சுடர் காட்டுதல் (நீராஜனம்)

மந்திரங்களால் துதித்தல் (மந்திரபுஷ்பம்) வலம்வருதல் (ப்ரதக்ஷிணம்) விழுந்து வணங்குதல் (நமஸ்காரம்) வேண்டுதல் (ப்ரார்த்தனை) தீண்டுதல் (ஆலிங்கனம்) திருநந்தி தேவரின் அனுமதியுடன் தரிசித்தல், பின்னர் இறைவனை அவன் விருப்பப்படி எழுந்தருளக் கோரல் ஆகியவை சிவபூசையின் அங்கங்கள். இத்தகு பூசை, மந்திரங்கள் வாயிலாகவும் மந்திரமேதுமின்றி மௌனமாகவும் செய்யலாம். பூசையின் இடையே உபதேசிக்கப்பட்ட ஐந்தெழுத்தை ஜபித்தல் உண்டு. இறைவனை அபிடேகஞ் செய்த நிர்மால்யத்தால் அடியார்களை எண்ணி நந்தியை நீராட்டி, நிர்மால்ய மலரினுல் அலங்கரித்து, நிர்மால்ய நிவேதனத்தால் 'பலி' தருவதும் உண்டு. (இங்குப் பலி என்பது உயிர்ப்பலி அன்று) விஸ்தாரமான பூசை செய்ய இயலாதவர்கள், அபிஷேகம், அருச்சனை, நைவேத்யம், தூபம், தீபம் இவற்றையாவது செய்ய வேண்டும்.

**அபிஷேகப் பலன்**

மலர்களால் மணம் நிறைந்த, குளிர்ந்த, தூய ஆற்று நீரால் ஈசனை ஆட்டினோர் உருத்திர லோகத்தில் இன்புற்று வாழ்வர் (தெளிவு 58)

**வெவ்வேறு அபிடேகங்களின் பலன்.**

பசுவின் பால் - கோதாவரிக் கரையில், பல வேதங்களைக் கற்ற அந்தணர்க்குப் பதினுயிரம் பசுக்களைத் தானம் செய்த பலன். (தெளிவு 54)

பஞ்சகவ்யம் - இந்திர விமானம் ஏறி உருத்திர லோகஞ் செல்லுதல். (தெளிவு 55; 56)

தயிர் - வைகுண்டத்தில் வாழ்வு (தெளிவு 99)

பசுநெய் - ஆயிர கோடி கற்ப காலம் ஓய்வின்றிச் செய்த பாவங்கள் வற்றும் (தெளிவு 100)

தேன் - ஊனைப் பற்றிய பாவம் ஒழியும் (தெளிவு 101)

கரும்புச் சாறு - வீரபத்திரக் கடவுளின் உலகை எய்துதல் (தெளிவு 102)

எண்ணெய் - வாயுலோகம் அடைதல் (தெளிவு 103)

இளநீர் - பிதிரர் உலகம் அடைதல் (தெளிவு 103)

விபூதி - சிவலோகஞ் சேர்தல் (தெளிவு 104)

வில்வக் குழம்பு - சதுர்வேதிகளுக்குப் பதிஞயிரம் பசுக்களை ஈந்த பலன் (தெளிவு 115)

**மலர்களால் அருச்சித்தல்**

நிலப்பூ, நீர்ப்பூ முதலிய வாசனை மலர்களால் ஈசன் கழலில் அருச்சித்தால் மலங்கள் நீங்கிச், சிவலோகத்தில் கணங்களின் தலைவராவர். (தெளிவு 49)

தும்பை போன்ற சிறிய பூக்களையோ, எருக்கம்பூ, ஊமத்தம்பூ போன்றவைகளையோ பெண்கள் அணிவதில்லை; உங்கள் மனவியுடன் போட்டி போடாமல் இத்தகைய பூக்களைக் கொண்டுகூட இறைவன் மகிழ்வெய்துகிருன்!

**கந்த லேபனம்**

சுகந்த சந்தனத்தை ஒரு நாள் இலிங்கத் திருமேனியில் சாத்தியவர்கள் பாவங்களை அழித்துத் தேவர்கணக்கில் ஒரு கோடி ஆண்டுகள் சிவலோகத்தில் வதிவர் (தெளிவு 110)

**தூபம்**

தேவதாரு, வில்வம், மேருமலையில் விளையும் பொருள்கள், கனி, நெய் முதலியன கொண்டு தூபமிடுபவர் அச்சுத பதம் அடைவர். (தெளிவு 106) இவற்றேடு மணமுள்ள பொருள்களையும் குங்குலியத்தையும் கலந்து இட்டால் ஆயிரம் மடங்கு பலன் பெருகும். (தெளிவு 107)

தீபமிட்டோர் மெய்ந்நெறியான ஞானத்தை அடைவர். ஈசனுக்கான அபிடேகத்தின்போது நீராஞ்சனம் ஏந்திஞேர் ஆயரம் கோடி சூரியர் போல் பிரகாசிக்கும் மேனியராய் பரமன் பதியை அடைவர். (தெளிவு 98)

வீட்டில் சிவபூசை செய்ய இயலாதவர்கள் பூசைக்குரிய பொருள்களைச் சிவாலயத்தில் கொடுத்து உரிய பயன்களை எய்தலாம்.

கற்றதனு லாய பயனென்கொல், வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்? (திருக்குறள் 2)

## குரு பூசை

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே.

- திருமந்திரம் 139

தனக்குச் சமய தீட்சை செய்வித்தவரும், ஐந்தெழுத்தை உபதேசித்தவரும் , ஆகமங்களை உரைத்தவரும் ஆன ஞான ஆசாரியரை ஈசஞக எண்ணி வழிபடவேண்டும்.

ஆசாரியர் உறையும் மடாலயத்தை வலம்வருவது சிவாலயத்தை வலம் வந்த புண்ணியத்தின் இரட்டிப்பாகும்; ஞானம் செறிந்த ஆசாரியரின் மேனியைத் தொழுதால் ஈசனைத் தரிசித்ததைப் போல் இரண்டு மடங்கு புண்ணியமாகும் (தெளிவு 31) குருவைப் பணிதல் சிவனைப் பணிதலைப் போல் இரண்டு மடங்காம்; துதித்தல் நூறு மடங்கு ஆகும். (தெளிவு 32)

குருவுக்குப் பரிவோடு பணிவிடை செய்தால் பரமசிவயோகம் என்பது நிகழும். இம்மையில் ஆசையைப் பெருக்கும் போகங்களை எய்த நினைப்பினும் குருவின் மலரடி வணங்கற்பாலது. (தெளிவு 33)

தன் குருவினைப் பின்தொடர்வது ஒவ்வோரடிக்கும் அசுவமேதப் பலனை அளிக்கும் (தெளிவு 34)

'அகம்பிரமம்' என்ற முத்தியை அளிக்கவல்ல தேசிகனின் தாமரைத் திருவடியைக் கழுவிய நீரினை வாங்கித்

தலைமேல் தெளித்துக் கொண்டால் புத்திபூர்வமாகச் செய்த பாவங்கள் முதல் அனைத்தும் அந்தக் கணத்திலேயே திண்ணமாகத் தீரும் (தெளிவு 44) ஆசாரியன் பாதோதகத்தை அருந்துதலும் உண்டு.

தேசிகன் விரும்பி உட்கொண்டுப் பின் வீசிய எச்சில் உணவை அன்போடும் மதிப்போடும் அருந்திஞல் ஓசைவடிவாகிய சண்டேச பதத்தை அடைந்து அனைத்து பாதகங்களிலிருந்து நீங்கலாம் (தெளிவு 45)

மானம், ஒழுக்கம், தவம், தானம் இவற்றுடன் கூடி இல்லறத்தைக் கடைப் பிடித்து முப்பொருளை உணர்த்தும் ஞான தேசிகனின் திருவடிகளைத் தீண்டிஞல் ஊனமான பாவமனைத்தும் ஒழியும். (தெளிவு 46)

தன் ஆசாரியனுக்கு உணவிடுதலால் கோடிஅந்தணர்க்கு முறைப்படி அன்னதானம் செய்த பலன் கிட்டும் (தெளிவு 85)

## அடியார் பூசை

மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே!
- சிவஞான போதம் 12.

சிவநேயம் நிரம்பியவரும் சிவவேடம் பொலிபவருமான அடியார்களை அன்புடன் வரவேற்று, உபசரித்து, அவர்களுக்குத் தேவையான பொருள்களைத் தருவது பெரும் சிவ புண்ணியமாகிறது. 'அத்தா ஆலங்காடா! உன் அடியார்க்கு அடியேன் ஆவேனே' என்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். 'ஆசையெலாம் அடியார் அடியோம் எனும் அத்தனை ஆகாதே' என்பார் வாதவூரடிகள்.

### அடியார்க்குப் பணிவிடை

கங்காதரஞகிய சிவபிரானின் தொண்டரைக் கண்டால் (தரிசனத்தால்) கங்கையில் நீராடிய பயன் உண்டாகும் (தெளிவு 119) அவர்களுக்கு ஆசனமளிப்பதால் வைகுண்ட

பதவி எய்தும (தெளிவு 118) தனகை நீரால் அவரது காலை விளக்கினுல் ஐந்து யுகங்கள் அக்னித்தேவன் உலகைத் துய்க்கலாம் (தெளிவு 119). அவர்தம்மை இன்முகத்துடன் வரவேற்று இன்சொல் அளிப்போர் ஆயிரம் கோடி யுகங்கள் ஞானவேல் முருகன் உலகில் உறைவர் (தெளிவு 120) அடியார்க்கு அர்க்யம் (கைகளில் நீர்) மற்றும் ஆசமனம் (அருந்த நீர்) உதவுவோர் துன்பங்கள் நீங்கி ஆதவன் உலகில் நண்ணுவர் (தெளிவு 121) அடியார் உளங்களிக்கத் தீபமும் கற்பூர ஒளியும் காட்டினேர் சிவஞானத் தெளிவடைவர் (தெளிவு 122) அவர்கள் மேனி அயர்வும் வியர்வும் நீங்க விசிறிவிட்டோர் வாயுதேவனின் நல்லுலகில் சேர்வர் (தெளிவு 123) தொண்டர்களை நீராட்டி மகிழ்வோர் அறிந்து செய்த பாவங்களையும் அறுப்பர் (தெளிவு 124); இறைவன் அன்பர்களை அன்புடன் உபசரித்து இன்னமுது ஊட்டினேர் ஆயிரங் கோடி கற்பம் உருத்திரலோகத்தில் வீற்றிருப்பர் (தெளிவு 128) பிறகு நிலத்திடை மன்னராய்ப் பிறந்து, இருவினை, பாசபந்தங்கள் நீங்கப் பெற்று ஆசாரியன் திருவருளால் எம்பெருமான் திருவடியில் ஒன்றுவர் (தெளிவு 129, 130)

மேகம் ஒன்று தம்தம்தம் என்று இடித்தது; தேவர்கள் அது 'தமத்வம் (புலன்களை அடக்குங்கள்)' என்று கற்பிப்பதாக் கொண்டனர்; அசுரர்கள் 'தயத்வம் (கருணைபுரியுங்கள்)' என்று புகட்டுவதாகக் கொண்டனர்; மனிதர்கள் 'ததத்வம் (கொடுத்துப் பழகுங்கள்)' என்று கூறுவதாகக் கொண்டனர். பொருட்பற்று என்பது மனித இயற்கை; கொடுத்துப் பழகினுல் குற்றங்கள் குறையும்.

**சிவனடியார்களுக்குக் கொடுக்கலாகும் பொருள்கள் - பலன்**

| | | |
|---|---|---|
| 1. கௌபீனம் | - | ஆயிரம் கோடி யுகம்சிவலோக வாசம் (தெளிவு 125) |
| 2. கம்பளம் | - | கம்பளத்தில் உள்ள ஒவ்வொரு முடிக்கும் ஒரு கழஞ்சு பொன் கொடுத்த பலன் (தெளிவு 126) |

| | |
|---|---|
| 3. புலித்தோல் (அ) மான்தோல் | கம்பளத்திற்குச் . சொன்ன பலன் (தெளிவு 127) |
| 4. சாமரம், அரிசி, - மலர், கனி, தீபம் முதலியன | ஒவ்வோர் அரிசிக்கும் மலருக்கும் ஆயிரம் யுகம் சிவபுரத்தில் வாசம் (தெளிவு 90, 91) |
| 5. சிவலிங்கம் - | ஆயிரம் கற்பம் சிவலோக வாசம் (தெளிவு 95) |
| 6. சிவாகமம் - | அறியாக் குழவிப் பருவம் முதல் செய்த கொலைப் பாவங்கள் தீரும் (தெளிவு 117) |
| 7. பாடலம், - உற்பலம் முதலியன கலந்த சுகந்த நீர் | வருணன் பதம் (தெளிவு 132) |
| 8. கையில் - அன்பளிப்பு | திருமால் உலகில் உறைதல் (தெளிவு 133) |
| 9. சுக்கு முதலிய - மருந்துகள் | ஆயிரம் கோடி கற்பம் ஆதவன் உலகு (தெளிவு. 134) |
| 10. பிணியகல - மருந்து | நூறுகோடி யுகம் சிவலோக வாசம் (தெளிவு. 135) |
| 11. விபூதிப் - பெட்டி | தீர்த்தாடனம் செய்த பலன் (தெளிவு 136) |
| 12. சிவஞானிக்குச் - சிவாகம தானம் | சிவானந்தம் பலன் (தெளிவு. 137) |
| 13. படிப்போர்க்கு - ஆமகதானம் | சிவஞானம் பலன் (தெளிவு. 138) |

14. உருத்திராக்க மணிமாலை - உருத்திரன் உலகம் (தெளிவு. 139)

15. கைத்தடியும், குடையும் - மனைவியொடு மன்னராய்ப் பிறப்பர் (தெளிவு. 140)

16. பாதுகை - சிவபுரம் (தெளிவு 141)

## பல்வகைப் புண்ணியம்

ஆட்பா லவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை; கிளக்க வேண்டா
(திருஞானசம்பந்தர் 3.54.4)

**சிவஸ்தல வாசம்**

சிவலிங்கம் உள்ள பூமியில் நான்கு திசைகளிலும் 150 முழ நீளத்திற்குச் சிவலோகமே. இவ்விடத்திற்குள் இயற்கையாய் இறந்தோர்க்குச் சாமீபம் பலன் (தெளிவு 77)

திருவையாற்றில் ஜீவித்து இறக்கும் கொசு முதலிய அனைத்து உயிர்களுக்கும் வலக்காதில் பிரணவத்துடன் கூடிய பஞ்சாக்ஷரத்தை இறைவனே உபதேசித்து அவை சாயுஜ்யம் அடைவதாகத் தலபுராணம் கூறுகிறது.

**பஸ்ம தாரணம்**

உடல் முழுவதும் விபூதியை உத்தூளித்துப் பூசுவதால் உரோமம் ஒவ்வொன்றும் சிவலிங்கமாகிறது. அந்த உடல் சிவாலயமாகிறது. (ரிபுகீதை)

**சடை தரித்தல்**

முறைப்படி சடைதரித்தால் அதில் உள்ள வேணி ஒவ்வொன்றிற்கும் அசுவமேத பலன்; சடை தவத்திற்கு அடையாளம். தாங்க முடியாச் சடையைத் தாங்குவதால் இறைவனுக்குத் தூர்சடீ என்று பெயர். புகழ்ச் சோழர் என்ற அரசர் தன் படைகள் போரில் கொன்று குவித்த குவியலில்

சடைத்தலை ஒன்று இருப்பதைக் கண்டு, பதைத்து, அத்தலையைத் தன் தலை மேல் சுமந்து, எரி வளர்த்து, அவ்வெரியை வலம் வந்து பிராணத்யாகம் செய்தார்; மூர்த்தி என்பார் இறையருளால் மதுரைக்கு மன்னராக நேர்ந்த போது சடாபாரமே மணிமகுடமாகத் தாங்கி ஆட்சி செலுத்தினார்.

சிவநெறியில் நிற்போர் நூல்களில் கூறிய வண்ணம் மொட்டைத் தலையராயினும், நீண்ட சிகை (குடுமி) உடையோராயினும் ஒவ்வொரு நாளும் நரமேத பலத்தினை அடைகின்றனர் (தெளிவு 94)

**சிவ வேள்வி**

ஆகமங்களில் கூறியுள்ள முறையே சிவயாகம் புரிவோர்கள் இருபத்தொரு தலைமுறைகளை எமவாதனை யிலிருந்து மீட்டுச் சிவலோகம் புகுவர் (தெளிவு 71)

**அன்னை வழிபாடு**

இறைவனை உமாதேவியோடு சேர்த்து வழிபட்டோர் பூரண சிவத்தினை எய்துவர் (தெளிவு 74)

'சத்தன் அருள்தரில் சத்தி அருள் உண்டாம்

சத்தி அருள் தரில் சத்தன் அருள் உண்டாம்' என்பது திருமந்திரம் 333.

**சிவதருமங்காக்க உயிர் துறத்தல்**

'குரு லிங்க சங்கமங்களுக்கு ஆபத்து நேர்கையில் அவற்றைக் காப்பதற்காகப் பிராணத் தியாகம் செய்யும் உரவோர்கள் எய்தும் பலனை என்னாலும் வகுத்துக் கூற இயலாது' என்று அனைத்தும் உணர்த்தும் பேரறிஞனை இறைவன் கூறினான் (தெளிவு 75)

காளையார் கோயிலில் சோமேசர் சந்நிதிக்கு எதிரில் உள்ள பெரிய கோபுரம் மருது பாண்டியரால் கட்டப்பட்டது. தலைமறைவாய் இருந்த மருது பாண்டியரைக் கைது செய்ய எண்ணிய ஆங்கிலேயர், அவர் சரண் அடையாவிட்டால் இக்கோபுரத்தைப் பீரங்கி வைத்துத் தகர்க்கப் போவதாய் பறை அறிவித்தனர். காட்டில் திரிந்து வந்த மருது பாண்டியர்

கோபுரத்தைக் காக்க விரும்பிச் சரணடைந்து தூக்கில் இடப்பட்டார். என்னே சிவநேயம்!

**கோசம்ரக்ஷணம்**

பசுவின் உடலில் அனைத்துத் தேவர்களும் உறைகின்றனர். பசு இறைவன் ஆடுவதற்குத் தேவையான ஐந்து பொருள்களையும் தருகிறது. மேலான திருநீறும் பசுவின் சாணத்திலிருந்தே தயாரிக்கப்படுகிறது. பசுவினை அடித்து மேய்த்தவனை வெகுண்டு தாமே அன்புடன் மேய்க்கத் துவங்கினர் அருந்தவ மறைச் சிறுவரான சண்டேசர். பசுவினைக் காத்தல் அறமாகிறது. பசுவினைத் துன்புறுத்துதல், கன்றினைப் பிரித்தல், கன்றுக்குப் பால் விடாது கறத்தல், கறவை நின்ற பசுவை விற்று விடுதல் ஆகியவை பாவச் செயல்களாகும்.

சூரிய உதயத்தின் முன் எழுந்து பசுக்களுக்கு ஒரு பிடி புல் பறித்து ஊட்டினலும் வறுமையனைத்தும் ஒழிந்து சிவலோகம் அடையலாகும் *(தெளிவு 52)*

**பித்ரு தினங்களில் மாகேசுவர பூசை**

பித்ரு தினங்களில் சிவபக்தருக்குத் திருவமுது செய்வித்தால், பிதிரர்கள் நரகவாதனை நீங்கிச் சுகம் பெறுவர். *(தெளிவு 131)*

**சிவ யோகி**

உபநயனம் ஆகாதவன்; காயத்திரி உபதேசிக்கப் பெற்றவன்; வேதம் முழுவதும் உணர்ந்தவன்; அக்னி ஹோத்ரி; சத்திர யாகி; வேதாந்தி இவர்களில் பின் உரைத்தவர் முன் உரைத்தவரைப் போல் ஒவ்வொருவரும் ஆயிரம் மடங்கு பெரியோர். சிவாகமங்கள் கருதும் முப் பொருளையும் உணர்ந்து உயிரில் உறையும் பரமசிவனின் அருளையே பார்த்திருக்கும் சிவயோகி இவரனைவரினும் மேலானவர். *(தெளிவு 83, 84)*

ஒரு பகலோ, இரவோ, ஒரு நாளோ, இரு நாளோ சிவயோகி ஓரிடத்தில் தங்கினல் அவ்விடமே அனைத்து மங்கலங்களும் நிரம்பித் தலம் யாவினும் சிறக்கும்.

அனுதிமலமுத்தனுன சிவபிரான் திருவடியில் அத்துவித முத்தியை எய்திய சிவயோகி எங்கு தங்கி இருந்தாரோ அவ்விடத்தில் பக்தியுடன் அரை நாழிகை தங்கினுலும் நம் பாவமெல்லாம் உடன் அழியும். (தெளிவு 40, 41)

சிவயோகிக்கு ஒரு கைப்பிடி பிச்சை இட்ட பலனுக்கு கோடி அந்தணருக்கு இச்சையோடு இட்ட பலன் ஈடாகாது. (தெளிவு 53) சாதகனுக இருக்கிற யோகிக்கு நூல்களில் கூறிய முறைப்படி அன்னம் இட்டால் அது ஒரு லக்ஷம் மறையவருக்கு அன்னமிட்ட பலனைத் தரும் (தெளிவு 86)

அகரம் ஆயிரம் அந்தணர்க்கு ஈயிலென்?
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென்?
பகரும் ஞானி பகல் ஊண் பலத்துக்கு
நிகரில்லை என்பது நிச்சயம் தானே.

**(திருமந்திரம் 1860)**

**ஏனையோர்க்கு அன்னமிடல்**

சிவபாலன் (சிறுவன்) ஒருவனுக்கு அன்னமிட்டால் பதினுயிரம் அந்தணர்க்கும், சமயதீட்சை பெற்ற சமயிக்கு அன்னமிட்டால் ஆயிரம் அந்தணர்க்கும், சிவ சங்கீர்த்தனம் செய்யும் ஒரு பக்தருக்கு அன்னமிட்டால் நூறு அந்தணர்க்கும் முறையே அன்னமிட்ட பலன் கிட்டும். (தெளிவு 87, 88, 89)

ஞானத்திற் சிறந்த துறவி, யோகத்திற் பொலிந்த பிரமசாரி, கிரியையில் மிக்க இல்லறத்தான், தியானத்தில் முனைந்த வானப் பிரஸ்தன் ஆகிய நால்வருக்கும் அவரவருக்குத் தேவையானவற்றைக் கொடுத்து உதவுவதால், ஆதவன் தோன்ற இருள் நீங்குவது போல அனைத்து வறுமையும் நீங்கித் தனம், தானியம், புத்திர, பௌத்திர போகங்கள் அதிகரிக்கும். (தெளிவு 63)

**ஆகமக் கல்வி**

ஆகமக் கல்வி எல்லையற்றது. ஆகமங்களில் இருபத்தி ஐயாயிரம் சுலோகம் அறிந்த ஆசிரியன் இளையவன் ஆவான்; ஐம்பதினுயிரம் கற்றவன் மத்திமன்; ஒரு லட்சம் உணர்ந்தவன் உத்தமன்; (தெ. 143)

**உபதேசக் கிரமம்**

சிவ புண்ணியங்களைச் செய்யும் முறையைத் தேசிகன் உபதேசித்தால், அம்முறைப்படியே இயற்ற வேண்டும் (தெளிவு 142) குரு உபதேசம் பெறாதோர் அதனை விரைவிற் பெற வேண்டும்.

## வாழ்த்த வாயும்

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே!
இருங்கடல் வையத்து
முன்னம் நீ செய்த நல்வினைப் பயனிடை,
முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும்
வழிபடும் அதனாலே!
- திருஞானசம்பந்தர் (2.106.1)

'அளப்பில கீதஞ் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளும் ஆறே' என்று முன்னர்க் கண்டோம் (பக்கம் 16) இறைவனுக்குப் புதுமலரைவிடப் பதமலர் (சொல்மலர்) தான் மிகவும் விருப்பம் என்று கீழ்வருமாறு குமரகுருபரர் கூறுவார்:- பதமலரால் பதமலரைப் பணி கொள்ளலாம்:-

தண்மலரும் பொழில் தென்கமலேசர்க்குச் சாத்துகின்ற
ஒண்மலர் சொன்மலர்க்கு ஒவ்வாது போலும்! ஒரு புலவன்
பண்மலர் சாத்திப் பணி கொண்டவா பச்சைமால் சிவந்த
கண்மலர் சாத்தியும் காண்பரி தான கழன்மலரே!

மலர் போன்றன ஈசன் திருவடிகள்; திருவீழிமிழலையில் பூசிக்கும் போது தன் கண்ணையே மலராகச் சாத்தியும் திருமாலால் அவை காணப்படவில்லை; ஆனால் பண்ணுடன் கூடிய பாடல் மலரை அளித்த சுந்தர மூர்த்திக்காக இரவிடை இருமுறை இறைவன் நடந்து தூது சென்றான் என்றால் என் சொல்ல!

தன் திருவடிகளைத் 'துதிப்போர்க்கே' வைத்தான் இறைவன். ''வார்கழல், வாய் வாழ்த்த வைத்து'' என்பார் மணிவாசகர்.

பல்வகைத் துதியும் கீதமும் பக்தியால் இறைவன்முன் ஓதும்போது அவற்றைக் கேட்ட தாவரம், அறிவில்லாத புழு, கிருமிகள்கூட அரன் உலகில் வதியும் என்றால் ஓதினவர்க்கு என்ன பலனை வகுப்பது? (தெளிவு 114)

காதலாகிக், கசிந்து, கண்ணீர் மல்கி, ஓதுவார் நன்னெறியிற் செல்வர். (திருஞானசம்பந்தர் 3.49.1)

''தொழுதெழுந் தாடிப் பாடித் தோத்திரம் பலவும் சொல்லி
அழுமவர்க்கு அன்பர் போலும் ஆவடு துறையனாரே!''

என்பார் அப்பர். (4.56.4) அன்பினால் அழுகை நேர்தல் என்பது பெரும்பாலும் இறைவனைத் துதிக்கும் சமயத்திலேயாம். ''மிக்க அன்போடு அழும் அவர்க்கு அமுதங்கள் காண்க ஐயாறன் அடித்தலமே'' (அப்பர் 4.92.5) ''அழுதால் உன்னைப் பெறலாமே!'' என்பார் மணிவாசகர். இறைவன் முன் நின்று வாய்விட்டுத் தன் கஷ்டங்களைக் கூறும் பழக்கம் பழங்காலத்தில் அதிகம் இருந்தது. ''உடையாய் நீயே அருளுதி என்று உணர்த்தா தொழிந்தே கழிந்தொழிந்தேன்'' என்று பச்சாத்தாபப் படுகிறார் மணிவாசகர்.

பல்வகைத் துதிகளால் இறைவனை வாயார வாழ்த்துவதும் திருமுறைகளையும் வேதங்களையும் தினமும் பாராயணம் செய்வதும் சாதனையின் மிக்க சிவ புண்ணியங்களாம்.

வேதத்தை விட்ட அறமில்லை; வேதத்தின்
ஓதத் தகும் அறம் எல்லாம் உள; தர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற்றார்களே! (திருமந்திரம் 51)

### நாமஜபம்

இடைவிடாமல் ஐந்தெழுத்தையோ, சிவ என்ற மந்திரத்தையோ, பொன்னம்பலம், திருச்சிற்றம்பலம், ஐயாறு, ஆரூரா என்றே ஓதிக்கொண்டிருப்பது உயர்ந்த தவம்.

''பொன்னம்பலம் என்றே ஓலகா நறகும
உயிர்க்கிரங்கி அருளாய்'' (திருவாசகம் 21.10)

''பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன்'' (திருவாசகம் 48.7)

''சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினைமாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே!'' (திருமந்திரம் 2716)

அப்பர் பெருமான் இறைவன் திருநாமத்தைப் 'பிடித்துக் கொண்டு திரிந்தாராம்!'. பலநாளும் அழைத்தாராம். அப்படி அழைத்தால் 'இவன் நம்மை விடமாட்டான் போல் இருக்கிறதே' என்றெண்ணி இறைவன் அருள் புரிந்து விடுவானும்!

''பவன் என்னும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னுள் அழைத்தால்
'இவன் என்னைப் பன்னுள் அழைப்பொழியான்' என்று
எதிர்ப்படுமே''
- (அப்பர் 4.112.9)

**எச்சரிக்கை**

இறைவன் நாமத்தை இடைவிடாமல் உச்சரிக்கத் தீவினைகள் அனுமதியா.

''மோத்தையைக் கண்ட காக்கை போல வல்வினைகள்
மொய்த்துன்
வார்த்தையைப் பேச ஒட்டா மயக்க நான் மயங்குகின்றேன்''
- (அப்பர் 4.75.7)

# நினைக்க மடநெஞ்சம்

மையலாய் மறவா மனத்தார்க்கெலாம்
கையில் ஆமலகக்கனி ஒக்குமே
- அப்பர் (5.72.2)

மனதிற்கு என்றும் வயாதாவதில்லை. எனவே மடநெஞ்சு! உடல் தளர்ந்தாலும், நோய்வாய்ப் பட்டாலும், வாய் பேச்சிழந்து போனலும் கூட மனம் ஈசனை எண்ணிச்

சிவார்ப்பணம் செய்ய இயலும்; உண்மையில், மனம் ஒன்ருதவழி காயத்தாலோ, வாக்காலோ, செய்த செயல் முழுமை பெருது. நெஞ்சால் அன்புருகி நிற்பவர் மனத்தில் ஈசன் புகுகின்ருன்.

''நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்ஞர் சடைப் புண்ணியன்'' (அப்பர் 5.90.9)

வஞ்சனையாகப் பூசிப்பவரைக் கண்டு நாணி ஒதுங்குகிருன்.

''பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பன் அவர் தம்மை நாணியே!''

ஓரிடத்தில் மலர்ந்துள்ள மலர்களைக் கண்டு மனமகிழ்ந்து ''இவை இறைவனுக்கு ஆகும்'' என்று யார் நினைக்கிருர்களோ அவர்கள் மூலமலமற்று வேதாந்தத்தே விளங்கும் வீட்டின்பத்தை எய்துவர் (தெளிவு 50)

முயன்று ஈட்டிய சிறந்த போகங்களைத் துய்க்கும் முன்பு அறிவோடு பொருந்தி ''இவையாவும் இறைவனுக்கு ஆகும்'' என்று மனதால் சிவார்ப்பணம் செய்வோர் எந்நாளும் சிறப்புற்று விளங்குவர் (தெளிவு 59)

பூஜா தே விஷயோப போக ரசனு - நான் செய்யும் பூசையானது நான் துய்க்கும் இன்பங்கள் - என்று சிவ மானஸ பூஜையில் கூறுவார் ஆதி சங்கரர். இந்நிலையில்

உள்ளம் பெருங்கோயில்; ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானுர்க்கு வாய்கோபுர வாசல்;
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்;
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே

(திருமந்திரம் 1823)

என்று கூறலாம்.

உள்ளம் என்னும் விளக்கை ஏற்றி ஈசனைக் காணக் கூறுவார் அப்பரடிகள்.

''உடம்பெனும் மனையகத்து உள்ளமே தகளி ஆக
மடம்படும் உணர்நெய் அட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே!'' (4.75.4)

மனதிற்கு வயதாவதில்லை என்றாலும் மறதி உண்டு. இதனை இறைவன்மேல் ஏற்றிக் கூறுவதும் உண்டு.

''மானேர் நோக்கி மணவாளா!
மன்னே நின்சீர் மறப்பித்து இவ்
வூனே புக என்றனை நூக்கி
உழலப் பண்ணுவித்திட்டாய்'' (திருவாசகம் 33.4)

''நின்னை எப்போதும் நினையலொட்டாய் நீ!
நினையப்புகில்
பின்னை அப்போதே மறப்பித்துப் பேர்த்தொன்று
நாடுவித்தி;
உன்னை எப்போதும் மறந்திட்டு உனக்கினிதா இருக்கும்
என்னை ஒப்பார் உளரோ? சொல்லு, வாழி ! இறையவனே!

(அப்பர் 4.112.4)

If I call not thee in my prayers,
If I keep not thee in my heart,
Thy love for me still waits for my love.

(கீதாஞ்சலி 32)

## ஐயே, மெத்தக் கடினம்!

உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியேனும்
கள்ளத்தே நிற்றி யம்மா! எங்ஙனம் காணுமாறே?

(அப்பர் 4.76.7)

'என்ன சார் எப்படியோ ஆரம்பித்து, எங்கெங்கோ சென்று, இப்படி முடிக்கப் பார்க்கிறீர்கள்?' என்று நீங்கள் கேட்பது புரிகிறது. பரீட்சையில் பாஸ் செய்ய வேண்டும் என்பது முதல் வேலை கிடைக்க வேண்டும், பெண்ணுக்குக் கல்யாணம் ஆக வேண்டும் என்றெல்லாம் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைக்கும் அளவில்தானே நம்முடைய பக்தி இருக்கிறது? இதில் தவறில்லை. இது ஓர் ஆரம்பமே.

'பல்லூழிக் காலம் பயின்றரனை அர்ச்சிக்கில்
நல்லூழி சற்றே நகும்' என்று கூறுவார்கள்;

சுருதி, ஸ்மிருதி, புராணங்களில் கூறப்பட்டுள்ள பலவும் பசு புண்ணியங்களே. சைவாகமங்கள் கூறும் சிவ புண்ணியமே சாலோகாதி இன்ப வீட்டினை நல்கும். (தெளிவு 22)

வேதங்கள் கூறும் அக்கிநிட்டோமம், சாந்திராயணம் முதலியவற்றைச் செய்தோரும் விமானத்தில் ஏறி சுவர்க்கத்தில் இன்பம் துய்த்து மீண்டும் மண்ணில் பிறப்பர் (தெளிவு 23) 'க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி' என்று இக் கருத்தைப் பகவத் கீதையும் வலியுறுத்தும். ஒரு நூறு அசுவமேதம் செய்தோர் இந்திர பதவி எய்துவர். ஆனல் இப்பதவியும் அநித்தியமே. சிவனடியார்கள் எய்தும் பெரும் பேற்றினை இவை தாரா. (தெளிவு 24) ஞான தேசிகன் கூறிய ஞான யோகத்தினுலும், குறைவில்லாத பத்தியினுலும் ஈசனை உணர்ந்து மோன ஞான ஆனந்த ஜீவன் முக்தியை அடைந்தோர் மீண்டும் ஊனமான மலஉடலில் வந்து பிறக்க மாட்டார்கள் (தெளிவு 72)

எனவே இந்நூலில் கூறப்பட்ட பலன்களை எண்ணிச் சிவ புண்ணியங்களில் ஈடுபடுவது மத்திமமே. நாம் அவ்வப்போது செய்யத்தக்க சிவ புண்ணியங்கள் என்ன என்ன இருக்கின்றன என்று அறிவதே இந்சிறுநூலின் முக்கிய நோக்கம். இம்மை மறுமைப் பலன்களில் பற்றின்றிப் பிறவாமை ஒன்றையே கருதி, இறைவனை வழிபடுதல் கடமையாகிறது.

''பாழ்த்த பிறப்பறுத்திடுவான் யானும் உனைப் பரவுவனே'' என்கிறார் குருநாதர். இவ்வுயரிய நிலையினை எய்த அவனருளாலே அவன் தாள் வணங்க வேண்டும். ''பெறவே வேண்டும் மெய்யன்பு'' என்று அவனிடம் தூய அன்பைக் கோரிப் பெறவேண்டும். (திருவாசகம் 32.6) அடியார்க்கு இறைவன் அருள் புரிகின்ருன். ஆனல் தூய அன்பு ஒன்றினலேயே அவனிடம் ஈடுபடும் மெய்யடியார்க்கு இன்பம் கொடுக்கின்ருன்!

''அன்பரானவர்க்கு அருளி மெய்யடியார்கட்கு
இன்பம் தழைத்திடும்'' (திருவாசம் 42.9)

அவன் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை. அனிச்சை செயலாக ஓதியும் உழைத்தும் அவனை உணர முடியுமா?

''ஓதியே கழிக்கின்றீர்கள், உலகத்தீர்! ஒருவன் தன்னை
நீதியால் நினைக்க மாட்டீர்; நின்மலன் என்று சொல்லீர்''

என்று எச்சரிக்கிறுர் அப்பர்.

இக்காலத்தில் யாகாதிகள் செய்வதற்குத் 'தோது' இல்லை; அவற்றினும் மேம்பட்ட பலனைச் சிவபூசை ஈட்டித் தரும். அக்நியிலும் சூரியனிடத்தும் அந்தணரிடத்தும் ஈசனையே கண்டு பூசிக்க வேண்டும். அன்றுடம் செய்யும் ஸந்தியாவந்தனம் சிவசக்தி வழிபாடே ஆகும்; இதனை உணர்ந்து இயற்ற வேண்டும்; காயத்ரி = வாக் = சக்தி; அதன் பொருள் ஞான சூரியஞன இறைவன்.

எரிபெருக்குவர் அவ்வெரி ஈசனது
உருவருக்கம தாவது உணர்கிலர் (5.100.7)

அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்கன் ஆவான் அரன்உரு அல்லஞே? (5.100.8)

செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே (3.22.2)

வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே (3.49.1)

இவ்விஷயத்தில் ஐயம் வேண்டாம். ''சங்கை உள்ளதும் சாவதும் மெய்'' (அப்பர் 5.80.4); சந்தேகிப்பவன் அழிகிறுன் என்று பகவற்கீதையும் கூறும்.

திருமாலும் நான்முகனும் சிவஞரது அடிமுடி அறியாமைக்குக் காரணம் சிவபூசை இயற்ருமையே என்பார் அப்பரடிகள்.

கண்டி பூண்டு கபாலம் கைக் கொண்டிலர்
விண்ட வான் சங்கம் விம்ம வாய் வைத்திலர்
அண்ட மூர்த்தி அழல் நிற வண்ணனைக்
கெண்டிக் காணல் உற்றார் - அங்கு இருவரே (5.95.10)

இன்றும் பலவகைகளில் 'கெண்டு'வார்கள் உண்டு

வேதம் ஓதில் என்? வேள்விகள் செய்கில் என்?
நீதி நூல்பல நித்தல் பயிற்றில் என்?
ஓதி அங்கமோர் ஆறும் உணரில் என்?
ஈசனை உள்குவார்க்கு அன்றி இல்லையே! (5.99.4)

எனவேதான் சொன்னேன்,

ஐயே மெத்தக் கடினம்!
அரன் அடிக்கு அன்பிருந்தால்
அதுவே அதி சுலபம்!

கண்டு கொண்மின் நீர், கானூர் முளையினைப்
புண்டரீகப் பொதும்பில் ஒதுங்கியே! (அப்பர் 5.76.2)

மெய்ம்மையாம் உழவைச் செய்து
'விருப்பு' எனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறைஎனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவு எனும் வேலி இட்டுச்
செம்மையுள் நிற்பர் ஆகில்
சிவகதி விளையும் அன்றே. (அப்பர் 4.76.2)

சிவம்

# நமச்சிவாயத் திருப்பதிகம் – அப்பர்

சொல்-துணை வேதியன், சோதி வானவன்,
பொன்-துணைத் திருந்து அடி பொருந்தக் கைதொழ,
கல்-துணைப் பூட்டி ஓர் கடலில் பாய்ச்சினும்,
நல்-துணை ஆவது நமச்சிவாயவே!

பூவினுக்கு அருங் கலம் பொங்கு தாமரை;
ஆவினுக்கு அருங் கலம் அரன் அஞ்சுஆடுதல்;
கோவினுக்கு அருங் கலம் கோட்டம்இல்லது;
நாவினுக்கு அருங் கலம் நமச்சிவாயவே!

விண் உற அடுக்கிய விறகின் வெவ் அழல்
உண்ணிய புகில், அவை ஒன்றும் இல்லைஆம்;
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணி நின்று அறுப்பது நமச்சிவாயவே!

இடுக்கண்பட்டு இருக்கினும், இரந்து யாரையும்,
''விடுக்கிற்பிரால்!'' என்று வினவுவோம் அல்லோம்;
அடுக்கல்கீழ்க் கிடக்கினும், அருளின், நாம் உற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே!

வெந்தநீறு அருங் கலம், விரதிகட்கு எலாம்;
அந்தணர்க்கு அருங் கலம் அருமறை, ஆறுஅங்கம்;
திங்களுக்கு அருங் கலம் திகழும் நீள் முடி;
நங்களுக்கு அருங் கலம் நமச்சிவாயவே!

சலம் இலன் ; சங்கரன் ; சார்ந்தவர்க்கு அலால்
நலம் இலன் ; நாள்தொறும் நல்குவான் , நலன்;
குலம்இலர் ஆகிலும், குலத்திற்கு ஏற்பது ஓர்
நலம் மிகக் கொடுப்பது நமச்சிவாயவே!

வீடினார், உலகினில் விழுமிய தொண்டர்கள்;
கூடினார், அந் நெறி; கூடிச் சென்றலும்,
ஓடினேன்; ஓடிச் சென்று உருவம் காண்டலும்,
நாடினேன் ; நாடிற்று, நமச்சிவாயவே!

இல்அக விளக்கு அது இருள் கெடுப்பது;
சொல்அக விளக்குஅது சோதி உள்ளது;
பல்அக விளக்கு அது பலரும் காண்பது;
நல் அக விளக்கு அது நமச்சிவாயவே!

முன்நெறி ஆகிய முதல்வன் முக்கணன்
தன் நெறியே சரண் ஆதல் திண்ணமே;
அந் நெறியே சென்று அங்கு அடைந்தவர்க்கு எலாம்
நன் நெறி ஆவது நமச்சிவாயவே!

மாப்பிணை தழுவிய மாதுஓர்பாகத்தன்
பூப் பிணை திருந்து அடி பொருந்தக் கைதொழ,
நாப் பிணை தழுவிய நமச்சிவாயப்பத்து
ஏத்த வல்லார்தமக்கு இடுக்கண் இல்லையே.

இந்நூல் கிடைக்கும் இடங்கள்

G. பரமேசுவர தீக்ஷிதர்
85, தெற்கு ரத வீதி
சிதம்பரம் 608 001.

V. இராஜசேகரன்
A-4 RBI குடியிருப்பு
காமராசர் சாலை
கே.கே. நகர்
சென்னை 600 078